# ஆதவன் பவனி

## ஆதித்ய ஹ்ருதயம்



இந்த திருமண விழாவிற்கு
வருகை தந்து மணமக்களை
ஆசீர்வதித்து
கௌரவித்தமைக்கு

# R.R.K. கேட்டரிங்

சார்பில்
அனைவருக்கும் நன்றியை
தெரிவித்துக் கொள்கிறோம்.

வீடு :
புது எண் : 47 (ப.எண் : 22),
வி. சி. கார்டன் முதல் தெரு,
மந்தைவெளி, சென்னை - 600 028.
போன் : 4941279

# தோத்திரம்

## காப்பு

பூவினைக் காக்கும் தெய்வம்
இராமனாய்ப் பூமி வந்தே
ராவணற் கொல்வ தற்காய்
இராவினைப் போக்கு வானை
மனதில் சிந்தித் தோர்ந்த
மகிமையைச் சொல்லு தற்கே
கணபதி துணையை வேண்டி
கனமலர்ப் பூசை கொள்வாம்

பூபாரம் காப்பதற்காய்ப் புவனத்தில் அவதரித்த ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தி, இராவணனைக் கொல்வதற்காக, இரவினைப் போக்குகின்ற தன் குலதெய்வமான ஸ்ரீ சூரிய நாராயணப் பெருமானை மனதில் சிந்தித்து அதன் (அவனின்) உண்மையை உணர்ந்து வென்றான். இந்த உண்மையை யாம் சொல்ல எல்லாம் வல்ல கணபதியின் திருத்தாளைச் சிந்தனை செய்வோம்.

# நூல்

## ஆதித்ய ஹ்ருதயம்

ததோ யுத்தப்ரிசராந்தம் ஸமரே சிந்தயா ஸ்திதம்
ராவணம்
ச அக்ரதோ த்ருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்திகம் 1

**திருமகள் கேள்வினின் வாளி**
**செற்றிடும் இராவணன் தலைகள்**
**தருவென மறுபடி வளரும்**
**தகைமையை இராமனும் கண்டான்**
**வருதுயர் நீக்கிடும் வள்ளல்**
**வாடினன் மனமே பகையோ**
**செருவிடை புதுவலி கொண்டான்**
**செயலினை மாலவன் கண்டான்.**

பூவில் உறை பொன்னை (திருமகளை) விரும்பி மணம் புரிந்தவனும் ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியுமானவனின் கோதண்டம் என்ற வில்லிடை நின்ற வாளிகள் (அம்புகுள்) இராவணன் என்ற பெயரைக் கொண்ட அரக்கனின் தலைகளைச் செற்றும் மீண்டும் மீண்டும் வளரும் நிலையினைக்

கண்ட வள்ளலாகிய இராமன் மிகவும் மனம் வாடினான். ஆனால், இராவணனோ மீண்டும் புதுவலிமையைக் கண்டான். இராமனும் அதை மனதில் சிந்தித்தான்.

தைவதைச்ச ஸமாகம்ய த்ரஷ்டுமப்யாகதோ ரணம்
உபாகம்யாப்ரவீதி ர்ராமம் அகஸ்த்யோ பகவாந் ருஷி: 2

காணரும் போரைக் காணக்
கடவுளார் கூட்டத்தோடே
வானமே வந்து சூழ்ந்த
வளர்சிகை முனிவ ரோடே
பூணரும் தவத்தின் மிக்க
பொன்மன அகத்தியன் தான்
மாணெழில் மாலின் முன்னே
மண்டியோர் உரைசெய் தாரே

ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்திக்கும் இராவணனுக்கும் நடக்கும் மிகப் பிரசித்தமான போரைக்காண கடவுளர் சூழ்ந்தனர். வானமெல்லாம் அவர்கள் நிறைந்தனர். நீண்ட சிகைகளைக் (தலைமயிர்களை) கொண்ட

முனிவர்களும் நிறைந்தனர். அவர்களுடனேயே வந்த அகத்திய முனிவனும் விளங்கும் அழகுடைய ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியின் பேரெழில் மயங்கி அவர்க்கு இனிமையானதோர் உரை செய்தார்.

ராம ராம மஹாபாஹோ ச்ருணு குஹ்யம் ஸ்நாதனம்
யேந ஸர்வாநரீன் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி 3

இராகவ மஹாபா ஹோஓர்
ரகசியப் பழமை சொல்வேன்
பூதவம் செய்த தாலே
பொருந்தினை இராம உந்தன்
மாபெரும் நாமந் தானே
செருவினில் வெற்றி கொள்ள
மார்க்கமும் உணர்வாய் பின்னும்
மண்ணுல கருள்வாய் என்றார்.

ஸ்ரீ இராகவனே! மகாபாஹோ பழைமையான ஓர் ரகசியத்தை நான் உன் நல்வினைப் பயனால் உனக்குக் கூறக் கடமைப்பட்டவன். இந்த பூமியானது செய்த நல்வினைப் பயனால் நீ சூரிய குலத்தில் ஸ்ரீ

இராமச்சந்திர மூர்த்தியாக அவதரித்துள்ளாய். இராமனே! உன் பெருமைக்குரிய நாமமான 'ஸ்ரீராம்' என்பதே என்றும் போரினில் வெல்லும். நீயே இந்த மண்ணுலகத்தைக் காக்கும் மகத்தான பேறு பெற்றவனும் ஆவாய்" என்றார்.

ஆதித்யஹ்ருதயம் புண்யம் ஸர்வ சத்ரு விநாசனம்
ஜயாவஹம் ஜபேந்நித்யம் அக்ஷய்யம் பரமம் சிவம் 4

**ஆர்த்திடும் பகையை வென்று**
**அழித்தொழித் தாழ்த்த வல்ல**
**அழிவிலாப் புண்ய மிக்க**
**அறிவது பரம இன்பம்**
**ஆதித்ய ஹ்ருதயம் என்றே**
**அகத்தியன் மேலும் சொல்வார்**
**சாதிக்க வல்ல அந்த**
**சத்திய மூர்த்தி கேட்க.**

எதையும் சாதிக்க வல்ல அந்த ஆதிப்பரம்பொருளான ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தி கேட்க, அகத்திய முனிவர் சொல்வார் "இராம!

உன்பகை இன்று ஆர்ப்பரிக்கிறது. அதை அழித்து ஒழித்து அளிக்க வல்ல ஆற்றலையுடைய முதன்மைப் பரம்பொருள் நீ. இதனை உணர்வாயாக. இதை உணர்தலே பரம இன்பம். இதனையும் விடப் பேரானந்தம் அளிப்பது, உங்கள் குல தெய்வமான ஸ்ரீ சூரியபகவானை வழிபடும் ஆதித்ய ஹ்ருதயம்" என்று சொன்னார்.

ஸர்வமங்கள மாங்கல்யம் ஸர்வபாப ப்ரணாசநம்
சிந்தாசோக ப்ரசமநம் ஆயுர்வர்தந முத்தமம் 5

அன்றியும் சர்வ பாவம்
அனைத்தையும் நீக்கும் நன்மை
ஒன்றிமங் களமும் நல்கும்
ஒழிவறு சிந்தை சோகவும்
கன்றிடச் செய்யும் ஆயுட்
காலத்தை விருத்தி செய்யும்
வென்றிகொள் உத்தம முமாகும்
வீரனே அளியே இராம!

சர்வ மங்களம் அளிக்க வல்லதும், பாவங்களைப்

போக்கவல்லதும், என்றும் நலமே அளிப்பதும், மனதின் கவ்லைகளை நீக்க வல்லதும், ஆயுளை விருத்தி செய்வதும், என்றுமே வெற்றி தருவதும், உத்தமமானதும் அதுவேயாகும். பெருங் கருணைப் பெருவெள்ளமாகிய இராமனே! என்று மேலும் கூறுவாராயினர்.

ரச்மிமந்தம் ஸமுத்யந்தம் தேவாஸுர நமஸ்க்ருதம்
பூஜயஸ்வ விவஸ்வந்தம் பாஸ்கரம் புவநேச்வரம் 6

**மனமகிழ் காலை தோன்றி**
**மனமலர் மலர்த்து வானை**
**தினந்தொழும் தேவர் கூட்டம்**
**அதனொடு அவுணர் ஈட்டம்**
**மனந்தொழும் கிரணம் கொண்டான்**
**மாலவன் திகிரி போலும்**
**தினகரன் சர்வ லோக**
**ஈஸ்வரன் தாளே போற்று**

இராம! உன் குலதெய்வமான ஸ்ரீமந் நாராயணனே சூரியன் ( நீ அவனது அம்சாவ்தாரம் என்றவாறு) அவனே இந்த நிலவுலகில் வாழும் சகலரின் மனமலர்களை

மலர்த்தும் ஆதிப்பரம்பொருள். அவனை நாடித் தேவர் கூட்டமும் அவுணர் கூட்டமும் நிறைந்திடும் (ஏனெனில் அவன் காசியப முனிவரின் மகன் - சூரன்) அதுமட்டுமல்லாமல் எல்லாரும் விரும்பும் பொன்னவர் கிரணங்களைப் பெற்ற பூரணன். திருமாலின் திகிரி போன்றான். தினகரன் என்ற பெயருடையவனும் சர்வலோக ஈஸவ்ரனும் ஆன அவனது திருத் தாளிணைகளே நமக்குக் கதியருளும்.

ஸர்வதேவாத்மகோ ஹ்யேஷ: தேஜஸ்வீ ரச்மிபாவன:
எஷ தேவாஸுரகணான் லோகான் பாதி கபஸ்திபி: 7

போற்றிசெய் சர்வ தேவர்
தோற்றமும் தானே யாகி
போற்றரு கிரணம் பொன்னால்
புவனம் மூவேழும் காத்து
போற்றிசெய் ஒளிகொள் மேனிப்
பொன்னென மிளிரு கின்றார்
மாற்றமென் தேவா சுரர்கள்
மார்த்தாண்டர் பக்தர் அன்றோ

அவனை எல்லாத் தேவர்களும் தொழுவார்.

இவ்வுலகத்தேற்றமும் அவனே. பொன்னிறக் கிரணம் கொண்டு மூவேழு புவனங்களையும் புரப்பவன் (காப்பவன்) அவனே. திருமகளைப் போன்ற திருவுடையவனும் மார்த்தாண்டன் என்ற பெயருடையவனும் ஆன அந்த ஆதிப்பரம்பொருளை அனவரதமும் வாழ்த்துவோம்.

எஷ பரஹ்மா ச விஷ்ணுச்ச சிவ ; ஸ்கந்த ; ப்ரஜாபதி
மஹேந்த்ரோ தநத : காலோ யமஸ் ஸோமோ 8

ஹயபாம்பதி:

**ஓமெனும் பிரணவத்தின்**
**உட்பொருள் உணர்ந்து வையம்**
**தாமெலாம் படைக்கும் அந்தத்**
**தாமரை மலரும் விஷ்ணு**
**நாமெனும் சிவனும் கந்த**
**சுவாமியும் ப்ரஜா பதியும்**
**ஏம இந்திரன் குபேரன்**
**எமனோடு வருணன் காலன்**

'ஓம்' என்று கூறப்படும் பிரணவப் பொருளும், அதன் உட்பொருளும் அவனென்று உணராதார் இந்த

வையத்தில் (உலகத்தில்) இருப்பதற்கில்லை. பிரம்மனும் விஷ்ணுவும் சிவபெருமானும் எல்லாம் அவனே. கந்த சுவாமியும் பிரஜாபதியும் ஏன் தேவர் கோனான இந்திரன், குபேரனையும் இன்னும் எமன், வருணன் காலன்

(இச்செய்யுள் குளகம்)
(குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்)

பிதரோ வஸவஸ்ஸாத்யா ஹபச்லிநௌ மருதோ மநு:
வாயுர்வஹ்நி: பரஜா ப்ராண: ருது கர்த்தா ப்ரபாகர்: 9

அன்றி பிதுரு தேவர்
அவரோடு வசுக்கள் ஸாத்யர்
அசுவினி தேவர் மருதி
மனுவொடு வாயு அக்னி
பிரஜைகள் பிராணன் இருது
பேரெலாம் அவனின் சீரே
பேசறு காந்தி யுள்ளான்
பெரும! நற்புகழின் மிக்கான்

இவர்கள் மட்டுமன்றி பித்துரு தேவர்; அஷ்ட வசுக்கள், ஸாத்யர், அசவினி தேவர், மருதி, மனுவொடு

வாயு, அக்னி பிரஜைகள், பிராணன், இருது எல்லாம் அவன் செயலே ஒப்பற்ற காந்தி (பிரபை) யுடைய பிரபாகரனும் பெருமை மிக்கவனும் புகழுடையவனும் ஆவான்.

(இதுவும் குளகம்)

ஆதித்ய : ஸவிதா ஸுர்ய: கக : பூஷா கபஸ்திமான்
ஸுவர்ணஸத்ருசோ பாநு : ஸ்வர்ணரேதா திவாகர்: 10

**ஆனதோர் அதிதி புத்ரன்**
**அகிலமும் படைத்துக் காக்கும்**
**அதிசயக் கிரணம் கொண்டான்**
**ஆகாய வீதி நின்றான்**
**துதிசெயும் பக்தர்க் காக்கும்**
**துணைவனாம் பொன்னின் மிக்கான்**
**நிதியெனும் பொன்னின் தேஜஸ்**
**நேர்த்தியாய்ப் பகலைச் செய்வான்**

அவன் அதிதி புத்ரன். உலகைப் படைத்துக் காக்கும் அதிசயம் மிக்க ஒளிக்கதிர்களைக் கொண்ட உண்மையாளன். அந்த ஆதவன் பவனி அகிலத்தைக் காக்கும். அவனைத் துதி செய்வோர் துணைவனும்

அவனே. பொன்னைவிட அரியன். பெரும் பொருளினும் மிகும் பொன்னாம் பகலைப் படைப்பவன் அவனே.

(இதுவும் குளகம்)

ஹரிதச்வ : ஸ்ஹஸ்ரார்ச்சி : ஸப்தஸப்திர்மரீசிமான்
திமிரோந்த : இசம்பு: த்வஷ்டா மார்த்தாண்ட
அம்சுமான் 11

**செய்யவான் வெளியில் எழு**
**செருமுகப் புரவி மீதே**
**உய்ய வாயிரங் கிரண**
**ஒளியுடன் பவனி கொள்வான்**
**மையிருள் அகற்றும் த்விஷ்டா**
**மார்த்தாண் டச்சிவ சொரூபி**
**மாரதன் புரவி வண்ணம்**
**மரகதப் பச்சை தானே**

மரகதம் போல் பச்சை வர்ணம் உள்ள ஏழு அரிய புரவிகளில் செம்மை ஒளியுடன் பவனி வருவான். இவ்வுலகமானது உய்ய ஆயிரங் கிரணம் கொண்டான்.

த்விஷ்டா என்றும் மார்த்தாண்டன் என்றம் உலகோர் புகழும் அவன் சிவ சொரூபி'' என்பதையும் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியே நீ உணர்வாயாக!

ஹிரண்யகர்ப்ப : சசிர : தபநோ பாஸ்கரோ ரவி :
அக்னிகர்ப்போ அதிதே : புத்ர : சங்க : சசிரநாசந: 12

**தானொரு ஹிரண்ய கர்ப்பன்**
**தண்ணளி தபனன் அக்னி**
**தன்னுடைக் கர்ப்பங் கொணடான்**
**சங்கனும் அதிதி புத்ரன்**
**மின்னொளிர் பாஸ்கரன் தான்**
**மேதினிக் குளிரைப் போக்கி**
**மன்பதை காக்கும் வள்ளல்**
**மாதவ! இன்னும் கேளாய்!**

''ஸ்ரீ இராமனே! மேலும் கேட்பாயாக. ஹிரண்ய கர்ப்பன் என்றும், அதிதி புத்ரன் என்றும் தபனன் என்றும், அக்னி என்றும் அங்கி என்றும் இன்னும் பாஸ்கரன் என்றும் அவனைப் பலபடப் பாராட்டுவார்கள். ஆயினும் மாதவனே (அவன் உங்கள்

அவனே. பொன்னைவிட அரியன். பெரும் பொருளினும் மிகும் பொன்னாம் பகலைப் படைப்பவன் அவனே.

(இதுவும் குளகம்)

ஹரிதச்வ : ஸ்ஹஸ்ரார்ச்சி : ஸப்தஸப்திர்மரீசிமான்
திமிரோந்த : இசம்பு: த்வஷ்டா மார்த்தாண்ட
அம்சுமான் 11

**செய்யவான் வெளியில் எழு**
**செருமுகப் புரவி மீதே**
**உய்ய வாயிரங் கிரண**
**ஒளியுடன் பவனி கொள்வான்**
**மையிருள் அகற்றும் த்விஷ்டா**
**மார்த்தாண் டச்சிவ சொரூபி**
**மாரதன் புரவி வண்ணம்**
**மரகதப் பச்சை தானே**

மரகதம் போல் பச்சை வர்ணம் உள்ள ஏழு அரிய புரவிகளில் செம்மை ஒளியுடன் பவனி வருவான். இவ்வுலகமானது உய்ய ஆயிரங் கிரணம் கொண்டான்.

த்விஷ்டா என்றும் மார்த்தாண்டன் என்றம் உலகோர் புகழும் அவன் சிவ சொரூபி'' என்பதையும் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியே நீ உணர்வாயாக!

ஹிரண்யகர்ப்ப : சசிர : தபநோ பாஸ்கரோ ரவி :
அக்னிகர்ப்போ அதிதே : புத்ர : சங்க : சசிரநாசந: 12

**தானொரு ஹிரண்ய கர்ப்பன்**
**தண்ணளி தபனன் அக்னி**
**தன்னுடைக் கர்ப்பங் கொணடான்**
**சங்கனும் அதிதி புத்ரன்**
**மின்னொளிர் பாஸ்கரன் தான்**
**மேதினிக் குளிரைப் போக்கி**
**மன்பதை காக்கும் வள்ளல்**
**மாதவ! இன்னும் கேளாய்!**

"ஸ்ரீ இராமனே! மேலும் கேட்பாயாக. ஹிரண்ய கர்ப்பன் என்றும், அதிதி புத்ரன் என்றும் தபனன் என்றும், அக்னி என்றும் அங்கி என்றும் இன்னும் பாஸ்கரன் என்றும் அவனைப் பலபடப் பாராட்டுவார்கள். ஆயினும் மாதவனே (அவன் உங்கள்

குலதெய்வமாகி) இந்த மேதினிக்கு உற்ற குளிரைப் போக்கும் வள்ளல் என்பதனையும் நீ நன்குணர்வாயாக. மேலும் கேட்பாயாக.

வ்யோமநாதஸ்தமோபேதீ ருக்யஜுஸ்ஸாமபாரக:
கநவ்ருஷ்டிரபாம் மிதர : விந்த்யவீதீ ப்லவங்கம : 13

**ஆயவா காய நாதன்**
**அகலிருள் நீக்கி ஆள்வான்**
**தூய வேத(ம்) இருக்கு**
**யஜுரோடு சாமம் முற்றும்**
**ஆய்பவன் மேகத் தோடே**
**அருமழை ஜலத்தின் நண்பன்**
**ஆயவன் விந்திய வீதி**
**அருவழிப் பயணம் கொண்டான்**

எல்லாம் ஆய மாதவனே! ஸ்ரீ இராமனே! (உங்கள் குலதெய்வமான) ஸ்ரீ சூரியன் ஆகிய ஆதவன் ஆகாயநாதன் இருள் நீக்கி ஒளி சேர்ப்பவன். தூயவன் (மாசற்றவன்) ரிக், யஜூர், சாமம் ஆகிய வேதங்களை முற்றும் ஆய்பவன். அது மட்டுமல்லாமல் மேகம், நீர்

ஆகியவற்றின் நண்பன். அவன் விந்திய வீதியில் அருமையாய்ப் பவனி கொள்பவன்.

(வித்தியவீதி - மேருவீதி - ஸ்ரீசங்கரர் விந்திய பர்வதம் வந்தடைந்தபோது பெற்ற சுகானுபவம் காண்க)

ஆதபீ மண்டலீ ம்ருத்பு : பிங்கள : ஸர்வ தாபந :
கவிர்விச்வோ மஹாதேஜா: ரக்த: ஸர்வபவோத்பவ: 14

**கொண்டதோர் வெயிலைத் தந்தே**
**மண்டலம் ஆளும் வள்ளல்**
**தண்டனை யமனும் தானாய்**
**தங்கிய பிங்கள வர்ணன்**
**கண்டெனும் கவியில் வல்லான்**
**கவினுரு தேஜஸ் உள்ளான்**
**மன்பதை படைக்கும் வெய்யன்**
**மாணெழில் சிவப்பன் வள்ளல்**

கிரக மண்டலத்தின் தலைவன் அவனே. அவனே வெயிலைத் தருபவன். வள்ளலும் அவனன்றி வேறில்லை. தீயோர்களுக்குத் தண்டனை தருபவனும் பிங்கள வர்ணனும் அவனே. கற்கண்டு நேர் கவி

தரவல்ல கவிஞனும் அவனே. பேரெழில் கொண்டவன். காயாம் பூப்போல் சிவந்த வண்ணன்... வள்ளல்.

நக்ஷத்ர க்ரஹதாராணாம் அதிபோ விச்வபாவந :
தேஜஸாமபி தேஜஸ்வீ த்வாதசாத்மன நமோஸ்து தே 15

**அல்லினில் மின்னும் வைர**
**அணியெனும் மீன்கள் கோள்கள்**
**எல்லைகொள் தலைவனாகி**
**இருநிலம் காக்கும் கொள்கை**
**வல்லவன் சிறந்த தேஜஸ்**
**வடிவம் ஈராறு கொண்டான்.**
**அல்லதோர் துணையும் ஈங்கு**
**ஆதவ உனைப்ப ணிந்தோம்.**

இரவினில் மின்னுகின்ற வைர அணிகளாய் ஒளி வீசும் நட்சத்திரங்கள், கோள்கள் இவற்றின் தலைவனும் அவனே. அவனே அவற்றை ஆளுகின்றான். ஆளுமையில் வல்லவன் அவன். (எதையும் எதிர் நோக்காது எல்லாவற்றுக்கும் மூலமாய் அறிவாய் அறிவிலியாய் அமைபவன் அவனே)

பன்னிருவகை தேஜஸ் உடைய பரமன் அவனே. அவனை வணங்குவோம்.

நம: பூர்வாய கிரயே பச்சிமாய அத்ரயே நம:
ஜ்யோதிர்கணானாம் பதயே திநாதிபதயே நம : 16

**பணிந்தனம் பரனே பூர்வ**
**பாகமாம் மலையாம் உன்னைப்**
**பணிந்தனம் மேற்கில் உற்ற**
**பனிவரைப் பெரும! இன்றும்**
**பணிந்தனம் பகலின் கோவே**
**ஜோதிர் கணங்கள் நாத**
**பணிந்தனம் பாஸ்கர உனையே**
**பாரினில் உண்மை ஆனாய்**

மேருவினை வலம் வரும் பரிதியே! பரமனே! உன்னைப் பணிந்தனம். பகலுக்கு இறைவனே! உன்னைப் பணிந்தனம். ஜோதிர்கணங்களின் தலைவனே! உன்னைப் பணிந்தனம். பாஸ்கரனே! நீதான் இந்தப்பாரில் உண்மைப்பொருள். உண்மையை உணர்த்தும் பொருளான உன்னைப் பணிந்தனம்.

ஜயாய ஜபபத்ராய ஹர்யச்வாய நமோ நம:
நமோ நம: ஸஹஸ்ராம்சோ ஆதித்யாய நமோ நம: 17

**ஆய வெற்றியின் வடிவம்**
**ஆதவ நீயே வெற்றி**
**ஆன நன்மையும் நீயே**
**ஆயிரம் கிரணம் கொண்டாய்**
**தூயவன் புரவி ஏழும்**
**தொழுதிடும் பச்சை வண்ணம்**
**ஆயவ! அதிதிபுத்ர**
**அங்கியே போற்றி போற்றி**

உண்மையான வெற்றி வடிவமானவனே! ஆதவனே! உண்மையுள் உண்மையான நன்மையானவனே! ஆயிரம் கிரணத் தொகுதிகளைக் கொண்டவனே, தூயவனே உன் ஏழு புரவிகளும் பச்சை வர்ணத்துடன் பரிமளிக்கின்றன. நாயகன் ஆயவனே, நலனே, அதிதியின் புத்திரனான சூரனே, நெருப்பே உன்னை வணங்குகிறேன் வணங்குகிறேன்.

நம : உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம :
நம: பத்மப்ரபோதாய ப்ரசண்டாய நமோ நம : 18

**போற்றி மார்த்தாண்ட போற்றி**
**போற்றியே உக்ர ரூப**
**போற்றிகொள் வீர மேனிப்**
**புதுமைகொள் பலநி றத்தாய்**
**போற்றிதா மரைமலர்த்தும்**
**பொன்னவ போற்றி போற்றி**
**நேற்றிராக் காய்ந்த வள்ளல்**
**நிமலனே போற்றி போற்றி**

உக்ரரூபம் (வடிவம்) உடையவனே! மார்த்தாண்டனே! (சாரங்கம் என்ற வில்லை ஏந்தும்) உண்மையான வீரனே உன்னை வணங்குகின்றேன். வெண்தாமரை மலரைக் கையிலேந்தி வடிவழகுடைய தாமரை முதலான மலர்களை மலரச் செய்யும் மலரவனே! உன்னை வணங்குகின்றேன். நீ போற்றி செயும் புதுநிறம் பல படைத்தாய். நேற்றைய இரவை அழித்தவனே! இன்று பகலைக் கொடுத்தவனே, உன்னை வணங்குகின்றேன்.

ப்ரம்மேசாநாச்யுதேசாய ஸூர்யாய ஆதித்யவர்ச்சஸே
பாஸ்வதே ஸர்வபக்ஷாய ரௌத்ராய வபுஷே நம: 19

**போற்றியே பிரம்ம ருத்ர**
**விஷ்ணுவே துதிசெய் ஈச**
**போற்றி ப்ரகாச கிரணப்**
**புண்ணியா போற்றி போற்றி**
**நாற்றிசை உலகம் யாவும்**
**நடுங்கிட ஒடுங்க வைக்கும்**
**போற்றிசெய் உக்ர சரீரப்**
**புதுமையே போற்றி போற்றி**

பிரம்மனும் ருத்ரனும் விஷ்ணுவும் போற்றி செயும் உன்னைப் பிரகாசமுடைய பெருமானை நானும் போற்றி செய்கிறேன். உக்ர சரீரம் உடையவனே! உலகம்யாவும் நடுங்கச் செய்யும் சூரனே! சூரியனே! உன்னைப் போற்றுகின்றேன். நீதான் நான்கு திசைகளைக் காக்கும் புதுமை. அதனால் உன்னைப் போற்றுகின்றேன்.

தமோக்னாய ஹிமக்னாய சத்ருக்னாய அமிதாத்மநே க்ருதக்னக்னாய தேவாய ஜ்யோதிஷாம் பதயே நம: 20

**இருளினைப் பனியைப் போக்கும்**
**இன்னருள் கருணை போற்றி**
**பொரவரும் பகைவர் தம்மைப்**
**பொன்றிட வைப்பாய் போற்றி**
**அரியஜோ திஸத் தலைவ**
**அற்புத மகாத்மா போற்றி**
**சிறுமைகொள் நன்றி யில்லார்ச்**
**சிக்ஷிப்பாய் போற்றி போற்றி**

இருளையும் பனியையும் நீக்குவை. இன்னருள் சேர்த்து உலகுய்ய வழிசெய்குவை. பகைத்திடும் பகை வெல்ல வைக்கும் பண்புடைய பெருமான் நீயே. ஜோதிட விஷயத்தில் நீயே முதல்வன். அற்புத மகாத்மாவும் நீயே. நன்றியில்லாரை நலிவுறச் செய்யும் சக்தியும் நீயே. அதனால் என் ஆண்டவனே! சூரியனே! உன்னை வணங்குகின்றேன்.

தப்தசாமீகராபாய வ ஹ்நயே விச்வகர்மணே
நம : தமோபிநீக்னாய க்ருணயே லோகஸாக்ஷிணே 21

போற்றரு பொன்னின் பாகு
போன்றவா போற்றி அக்னி
போற்றியே விசுவ கர்மா
பொருவிருட் பகையே போற்றி
தோன்றினாய் லோக சாக்ஷி
தூயவா போற்றி போற்றி
மேற்றிசை வானும் கீழும்
மெய்த்தவம் கொள்வாய் போற்றி

விசுவகர்மா என்று விளங்குபவனும் பொன்னின் பாகு போன்றவனும் அக்னியும் ஆன என் ஆண்டவனே! உன்னைப் போற்றுகிறேன். இருளின் பகைவனே! இந்த உலகுக்கு உண்மைக்கு ஒரே சாக்ஷியாக உள்ளவனே! தூயவனே! மேற்றிசை வானும் கீழ்த்திசை வானும் ஆனவான நாயகனே உன்னைப் போற்றுகின்றேன்.

நாசயத்யேஷ வை பூதம் ததேவ ஸ்ருஜதி ப்ரபு:
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத்யேஷ கபிஸ்திபி : 22

**இவ்வுல கழிப்பாய் நீயே**
**இனியதாய்ப் படைப்பாய் நீயே**
**இருநில மிதனைக் காக்கும்**
**இறைவனாம் ஒருவன் நீயே**
**பெய்மழை வெயிலும் காற்றும்**
**பிறவெலாம் நீயே உன்னை**
**உய்வகை பெறுவான் வேண்டி**
**உரைத்தனம் போற்றி போற்றி**

ஊழிக் காலத்தில் உலகை அழிப்பவனும் அதே போல உற்ற காலத்தில் உலகைப் படைப்பவனும் படைத்த வண்ணம் காப்பவனும் நீயே. அதனால் முத்தொழில் வல்ல முழு முதலான உன்னை வணங்குகிறேன். மழையாகவும், வெயிலாகவும், காற்றாகவும், புவனமாகவும், ஆகாயமாகவும் உன்னை இந்நிலவுலகில் நல் வாழ்வினை வேண்டி வழிபடுகிறேன். எனக்கு அருள் புரிவாயாக.

ஏஷ ஸுப்தேஷு ஜாகர்த்தி பூதேஷு பரிநிஷ்டித :
ஏஷ சைவாக்நிஹோத்ரம் ச பலம் சைவாக்
நிஹோத்ரிணாம் 23

**இரவினில் ப்ராணி தூங்க**
**இறைவநீ விழித்திருப்பாய்**
**உறவென உள்ளாய் உள்ளே**
**உத்தம அக்னி ஹோத்ரம்**
**உரியவள் அக்னி ஹோக்ரி**
**உறுபயன் நீயே யான**
**அருமையை உணர்ந்தோம் ஐய**
**அவிரொளிச் சரண்புகுந்தோம்.**

இயங்குகின்ற நிலைத்திருக்கின்ற பிராணிகள் தூங்க இரவிலும் விழித்திருப்பாய். உன்னை உறவெனக் கொண்ட யாரும் ஒரு நாளும் உன்னை மறவார். நீ அக்னி ஹோத்ரம். உன் மனைவி சாயாதேவியோ அக்னி ஹோத்ரி, உன்றன் அருமையை உணர்ந்தோம் அதனால் சிறப்புடைய ஒளியுடைய இறைவனே, உன்னை வணங்குகின்றேன்.

வேதாச்ச க்ரதவச்சைவ க்ரதூனாம் பலமேவ ச
யாநி க்ருத்யானி லோகேஷு ஸர்வ ஏஷ ரவி: ப்ரபு: 24

ஓதிடும் வேதம் இருது
இருதுக்கள் பயனும் ஆன
சாதனைக் கர்மா தன்னை
உத்தமம் ஆக்கும் சக்தி
நாதனே போற்றி போற்றி
நற்குண வள்ளல் போற்றி
ஆதவ ஆழித் திண்டேர்
அழகனே போற்றி போற்றி

வேதமும் நீயே! இருதுக்கள் நீயே! இருதுக்களின் பயனும் நீயே ஆகினை! நீ கர்ம யோகி. அதனால் தாமதமானாலும் தகுபலன் அடையும் உத்தமச் சக்தி நீ! நல்ல குணங்களும் பெற்று வள்ளலாய் விளங்கும் எம் இறைவனே! ஒற்றைச் சக்கரத் தேருடையவனே! உண்மையான அழகனே உன்னை வணங்குகின்றேன்.

ஏநமாபத்ஸு க்ருச்ரேஷு காந்தாரேஷ பயேஷு ச
கீர்த்யந் புருஷ : கச்சித் நாவஸீததி ராகவ 25

இவ்வண மாக வந்த
இன்தமிழ் அகத்தி யன்தான்

செவ்வணம் உரைத்த லோடு
ஸ்ரீதரன் தன்னை நோக்கி
வெவ்வனம் தன்னில் துன்பம்
வெருட்டிட வந்த போதில்
வெளவிடும் அச்சம் தன்னில்
வள்ளலே காப்பாம் என்றான்.

என்று இவ்வணம் அகத்தியன் செல்வணம் உரைத்தலோடு எத்தகைய துன்பமுற்றாலும் எத்தகைய துயர் நம்மை அச்சுறுத்தினாலும் வள்ளலாகிய சூரியனே நம்மைக் காப்பான் என்று சகல கல்யாண குணங்களும் கொண்ட ஸ்ரீதரனாகிய ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்திக்குச் சொன்னான்.

பூஜயஸ்வை நமேகாக்ர : தேவதேவம் ஜகத்பதிம்
எதத் த்ரிகுணிதம் ஜப்த்வா யுத்தேஷு விஜயிஷ்யஸி
26

ஆன்றவன் சர்வ லோக
ஆட்சியன் அவனை நெஞ்சில்
ஏன்றதோர் துணையே என்று
ஏக சிந்தையனாய் நின்று

**கான்றிய மலர்கள் தூவி**
**கருமையை நீக்கு வானை**
**மூன்றொரு முறைஜெ பித்தால்**
**ஆண்டகை வெற்றி கொள்வாய்**

அன்று அலர்ந்த பூவெடுத்து ஆன்றவனாம் ஆதவனை மூன்று முறை திரிகரண (மனம், வாக்கு, காயம்) சுத்தியோடு நீயே என் துணை என்று நினைவார்க்கு ஆண்களில் சிறந்தவனான பாஸ்கரன் சர்வ மங்களத்திலும் மங்களமான ஸ்ரீராமனே உனக்கு வெற்றியை நல்குவான். இருளை நீக்கம் அவனே அதைச்செய்ய இயலும்.

அஸ்மிந் க்ஷணே மஹாபாஹோ ராவணம்
த்வம் வ திஷயஸி
ஏவமுக்த்வா ததாகஸ்த்யோ ஜகாம சயதாகத்ம் 27

**கொள்கை யாய்வந்த செல்வ**
**குவவுறு மணித்திண் தோள!**
**கொள்கை கோதண்ட பாணி**
**குவித்திடு வென்றி இன்றே**

ஓமஹா பாஹோ வென்று
ஓர்ந்தனன் ரிஷியும் ராமன்
ஆமதே சிறப்பென் றெண்ணி
அடுத்ததைச் செயலில் செய்ய.

அரக்கரைக் கொன்று அமரரைக் காக்கும் சாரங்க பாணியே! உன் கொள்கைப்படி (சீதையைக் கவர்ந்து சென்ற அவுணனாம் இராவணனை வெல்ல) திரட்டு மிக்க மலைத்தோள் கொண்ட நீ இன்றே முயல்வாயாக ஓ மகா பஹோ! என்று அந்த அகத்தியன் ஆண்களில் சிறந்தவனான ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்திக்கு அறிவுறுத்த, அவனும் ஆம் குறுமுனியின் வார்த்தைகளை உண்மை என்று கொண்டு செயல் வடிவில் காட்டத் தொடங்கினான்.

ஏதச் ச்ருதீவா மஹாதேஜா : நஷ்டசோகோ அபவத்ததா
தாரயாமாஸ ஸுப்ரீத: ராகவ: ப்ரயதாத்மவான 28

செய்ய வாணகை முறுவல்
செய்த செந்தா மரைகள்
உய்யவே ராம நாமம்
உகந்தவன் மனம் மகிழ

ஐயமும் சோகம் யாவும்
அற்றனன் பருதி தன்னை
கைவரு திருவே என்னக்
கருதினன் உறுதியாக

அறிதுயில் வண்ணன் அம்புயக் கண்ணன் முறுவலில் சிறந்தான் மொய்ம்புடை அண்ணல் சந்தேகமும் சினமும் அற்ற நிர்மலமான நெஞ்சோடு (ஸ்ரீ சூர்ய நாராயணனை) என் செல்வமே உன்னை நான் (குல தெய்வமாகிய உன்னை) உறுதியாகப் பற்றிக்கொண்டேன் என்று பணிந்தனன்.

ஆதித்யம் ப்ரேக்ஷ்ப ஜப்த்வாது பரம் ஹர்ஷம்
அவாப்தவான
த்ரிராசம்ய சுசிர்பூத்வா தநுராதாய வீர்யவான 29

ஆதவன்தன்னைப் பார்த்தான்
அருவுருச் ஜெபித்தான் பின்னர்
மூவொரு முறைப ணிந்தான்
முளுமா சமனம் செய்தே
தேவரும் பிறரும் தெவ்வர்
யாவரும் அஞ்சும் வில்லை

**ராகவன் தொழுது பெற்று**
**ராவணற் சிந்தை செய்தான்.**

ஸ்ரீ சூரிய பகவானை நோக்கி இராமனும் அருமையும் பெருமையும் கொண்டு ஜெபித்தான் மும்முறை. பின்னர் பணிந்தனன். முறையாக ஆசமனம் செய்தான் (க்ஷத்திரியர்களுக்கு விதிக்கப்பட்ட முறையில்) தேவர்களும் பகைவர்களும் அஞ்சும் புகழ்மிக்க கோதண்டம் என்றும் சாரங்கம் என்றும் கூறப்படும் வில்லைத் தொழுது கைகளில் எடுத்துத் தன் பகைவனான இராவணனைச் சிந்தை செய்தான். மனதில் எண்ணினான்.

ராவணம் ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்தாய
ஸமுப்பாகமத்
ஸர்வயத்தேந மஹதா வதே தஸ்ய த்ருதோபவத் 30

**செய்யதாள் கரிய மேனி**
**செந்திரு மாலும் போரில்**
**எய்துரா வணனைக் கண்டான்**
**இன்னகை முரல் ஊற**

**கொய்மலர் போலே பத்துத்**
**தலைதனைக் கொய்வேன் என்றே**
**எய்திடும் வாளி தன்னை**
**ஏந்தலைப் பரிதி கண்டான்**

போர்க்களத்தே (இரத்தச் சகதியால் அளைந்த) செம்மையான தாளிணைகளையும் கரிய மேனியையும் உடைய இராவணனைப் போர்க்களத்தில் கண்டான். எப்பொழுதும் மாறாத புன்னகை கொண்ட முகில் வண்ணன் கமலக் கண்ணன் மலர்களைக் கொய்வதைப் போலப் பகைவனின் பத்துத் தலைகளையும் கொய்வேன் என்று அரிய அம்பினைத் தேர்ந்து தன் கோதண்டம் என்ற புகழ்மிக்க வில்லில் பூட்டலைப் பரிதி என்றும் இனன் என்றும் செங்கதிர் என்றும் கூறப்படும் ஸ்ரீ சூரியனும் கண்டான்.

அத் ரவி : அவதத் நிரீக்ஷ்ய ராமம்
முதிதமநா : பரமம் ப்ரஹ்ருஷ்யமாண :
நிசி சரபதிஸம்க்ஷபமம் விதித்வா
ஸுரகணமத்பகதோ வச : த்வரேதி

காண்டலும் உவகை பூத்தான்
கரியவன் தன்னைப் பார்த்து
ஆண்டகை இராம்ன் வாளி
அழித்திடும் தீமை யென்றே
மூண்டிடும் மனதில் எண்ணி
முராலிநீ தேவ ரூடே
மூண்டஉன் பகையைத் தீய்க்க
முயல்கநீ விரைவின் என்றான்

கண்டதும் மகிழ்ச்சி கொண்டான். கார்முகில் வண்ணனும், ஆண்களில் சிறந்தவனுமான ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியின் இராமபாணம் உலகின் தீமை அனைத்தையும் அழித்து நன்மையே சேர்க்கும். மனதில் (மூண்ட எண்ணம்) கொண்டவனாக "முரண் எனும் அரக்கனைக் கொண்ட ஹரியே! தேவர் பகைவனும் உன் அவதாரக்காரணனும் ஆன உன் பகையை உடன் அழிக்க இன்னே முயல்க" என்றனன்.

## பலன்தரும்

# பரிதியின்

## எட்டு துதிகள்

சூரிய பகவானைப்பற்றிய எண்ணற்ற தோத்திரங்களில் அதி முக்கியத்துவம் வாய்ந்தது சூரியாட்டகம். சாம்பபுராணத்தில் உள்ள பிரசித்தி பெற்ற இந்த அட்டகத்தை, பலன்தரும், ஆதவனின் எட்டு துதிகள் என்று தெள்ளு தமிழில் தந்துள்ளோம்.

எல்லாச் சித்திகளையும் பெற, எட்டு மிக வலிமை மிக்கதாகும்.

**பட்டமங்கையில் பாங்காய் இருந்தங்கு**
**அட்டமாசித்தி ருளிய அதுவும்,**

**என்பார் மணிவாசகப் பெருமான்.**

**சத்தியஞான சபையை எண்கோணத் தாமரை**
**வடிவில் அமைத்தார் வள்ளல் பெருமான்.**

எல்லா நலனும் பெற்று நோயற்றுவாழ - தினசரி அதிகாலையில் ஆதவனை வழிபட்டு ஆனந்த வாழ்வு பெறுக.

# சூரிய அட்டகம்

## சூரியனிடம் பிரார்த்தனை

ஸாம்ப உவாச—

ஆதிதேவ நமஸ் துப்யம் ப்ரஸீத மம பாஸ்கர!
திவாகர நமஸ் துப்யம் ப்ரபாகர நமோஸ்துதே! 1

**ஆதியே முதலே எங்கள்**
**நீதியும் நிலையும் நீயே**
**நீதியால் உலகை வென்ற**
**நிமலனே உன்னை எங்கள்**
**மாதரார் போற்றல் ஏனோ**
**மகவானுக் கருளும் உன்னைக்**
**காதலால் நாளும் போற்றும்**
**கனகமே வாழி வாழி.**
**ஆதியாம் தேவ அந்தப்**
**பிரபுவே விபுவே உன்னை**
**நீதியால் வழிபட் டோர்கள்**
**நிச்சயம் பிழைப்பார் மண்ணில்**

நீதியும் நிலையும் நீயே
நிமல பாஸ்கர னேபோற்றி
ஆதிக்கும் ஆதியனாய்
ஆதவா போற்று கின்றோம்.

பொன்னிறக் கதிர்களை உடையவனே! முழு முதற் பரம் பொருளே! நீதியை உலகுக்கு உணர்த்தி அதை வென்றவனே! இந்திரனுக்கும் அப்பதவி கிடைக்கக் காரணவான் நீயே. நீயே விஷ்ணு, விபு. உன்னை வழிபட்டோர் நல்வாழ்க்கை வாழ்வர். எல்லாவற்றுக்கும் முதன்மை பெற்ற உன்னை நான் வணங்குகிறேன்.

பாஸ்கரா, ஆதிதேவா! உன் அருள் வேண்டுகிறேன். திவாகரா பிரபாகரா உன்னை வணங்குகின்றேன்.

ஸப்தாச்வ ரதமாரூடம் ப்ரசண்டம் கச்ய பாத்மஜம்
ச்வேத பத்மதரம் தேவம் தம் ஸூர்யம் ப்ரணமாம்யஹம்

# சூரிய அட்டகம்

## சூரியனிடம் பிரார்த்தனை

ஸாம்ப உவாச—

ஆதிதேவ நமஸ் துப்யம் ப்ரஸீத மம பாஸ்கர!
திவாகர நமஸ் துப்யம் ப்ரபாகர நமோஸ்துதே! 1

**ஆதியே முதலே எங்கள்**
**நீதியும் நிலையும் நீயே**
**நீதியால் உலகை வென்ற**
**நிமலனே உன்னை எங்கள்**
**மாதரார் போற்றல் ஏனோ**
**மகவானுக் கருளும் உன்னைக்**
**காதலால் நாளும் போற்றும்**
**கனகமே வாழி வாழி.**
**ஆதியாம் தேவ அந்தப்**
**பிரபுவே விபுவே உன்னை**
**நீதியால் வழிபட் டோர்கள்**
**நிச்சயம் பிழைப்பார் மண்ணில்**

**நீதியும் நிலையும் நீயே**
**நிமல பாஸ்கர னேபோற்றி**
**ஆதிக்கும் ஆதியனாய்**
**ஆதவா போற்று கின்றோம்.**

பொன்னிறக் கதிர்களை உடையவனே! முழு முதற் பரம் பொருளே! நீதியை உலகுக்கு உணர்த்தி அதை வென்றவனே! இந்திரனுக்கும் அப்பதவி கிடைக்கக் காரணவான் நீயே. நீயே விஷ்ணு, விபு. உன்னை வழிபட்டோர் நல்வாழ்க்கை வாழ்வர். எல்லாவற்றுக்கும் முதன்மை பெற்ற உன்னை நான் வணங்குகிறேன்.

பாஸ்கரா, ஆதிதேவா! உன் அருள் வேண்டுகிறேன். திவாகரா பிரபாகரா உன்னை வணங்குகின்றேன்.

ஸப்தாச்வ ரதமாரூடம் ப்ரசண்டம் கச்ய பாத்மஜம்
ச்வேத பத்மதரம் தேவம் தம் ஸூர்யம் ப்ரணமாம்யஹம்

ஏழெனும் குதிரை மீது
ஏறியே வருவாய் நீதான்
பாழெனும் பிறவி தன்னைப்
படைத் தளித் தமிழக்க வல்லாய்
கீழென என்னை மேலோர்
கீண்டிடா வண்ணம் காப்பாய்
ஏழெழு ஜென்மம் காப்பாய்
எனக்கினி துணை நீ அன்றோ.
காசிப முனிவன் ஈன்ற
கண்ணியன் உன்னை யன்றி
ஆசறு மறைவல் லோர்கள்
ஆரினிப் புவனம் மீதில்
தேசுடை நீயே செல்வம்
தெளிவுற விளங்கச் செய்யும்
காசியின் கதியும் நீயே
கங்கையைப் பெற்றா யன்றோ!

ஏழு புரவிகள் பூட்டிய தேரில் வீற்றிருப்பவரும், ஒளிமிக்கவரும் காசிபரின் புத்திரரும் வெண்தாமரை ஏந்தியவரும் ஆகிய ஒளிபொருந்திய சூரியபகவானை நான் வணங்குகிறேன்.

பிறவிப்பிணியை அறுக்கவல்லவரும், ஏழேழு ஜன்மங்கள் காப்பவரும் ஆகிய நீதான் என்னைக் கீழானவர் என்று பேசாவண்ணம் காக்க வேண்டும்.

லோஹிதம் ரதமாரூடம் ஸர்வலோக பிதாமகம்
மஹாபாபஹரம் தேவம் தம் சூர்யம் ப்ரணமாம்யஹம்!

**சிவந்ததோர் தேரில் உள்ளாய்!**
**சிறந்தனை சிறப்பீன் செல்வ!**
**உவந்தனை உலகம் தன்னை**
**உய்விக்கச் செய்யும் சக்தி**
**அவந்தனை நீக்கி ஆக்கும்**
**ஆதவ உன்போல் யாரோ**
**சிவந்தனர் தேவ தேவ**
**செய்தொழில் நேர்த்தி வல்லாய்.**
**தாமரை கரத்தில் ஏந்தி**
**தாமரை மலரச் செய்வாய்**
**தாமரை கையில் உள்ளான்**
**தண்ணளிக் கண்கள் நீயே**

மாமறை போற்றும் செல்வ
மறைகளின் தந்தை அன்றோ
ஆமிறை நீயே நீயே
அனைத்துமே ஆனாய் நீயே.

சிவப்பான தேரில் வீற்றிருப்பவரும் ஒளிமிக்கவரும் உலகனைத்தின் தந்தைக்கும் தந்தையாகிவரும் கொடிய பாவங்களைப் போக்குபவருமான அந்தச் சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

வெண்டாமரை மலரைக் கையிலேந்தி கமலமலர்களை மலரச் செய்யும் நீயே, விரைந்து செல்லும் மானினைக் கையிலேந்திய சிவபெருமானின் கண்களுமாக உள்ளாய். பெருமையுடைய மறைகள் போற்றும் ஆதவனே உன்னை நான் வணங்குகின்றேன்.

த்ரைகுண்யஞ்ச மஹாசூரம் ப்ரஹ்மவிஷ்ணு
மஹேச்வரம்
மகாபாபஹரம் தேவம் தம் சூரியம் ப்ரணமாம்யஹம்

முக்குண வடிவோன் நீயே
மூர்த்தியாம் கீர்த்தி நீயே
எக்குணம் இல்லா தானாய்
ஏகமாம் ஆதி மூர்த்தி
எக்கணம் எந்த நேரம்
என்பதும் உந்தன் மாயை
இக்கணம் தொழுதோர் வாழ்வர்
இறைவனாம் ஒருவன் நீயே
பிரம்மனும் விஷ்ணு தானும்
பேசறு ஈசன் தானும்
பிரம்மமே சூரன் நீயே
பேணினை பாவம் நீக்கி
பிரமரம் தேனை மாந்தும்
பேணினோம் உம்மை ஈச
அரவமும் அனைத்து மான
அற்புதா போற்றி போற்றி

(ராஜஸ, சத்துவ, தாமஸ) முக்குண வடிவினரும், பிரம்மா, விஷ்ணு, மகேச்வர மும்மூர்த்தி சொரூபியும், மகாசூரரும் கொடிய பாவங்களைப்

போக்குபவருமுகிய அந்தச் சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

வண்டு தேனை மாந்துதல் போல ஒலிகளுக்குக் காரணமான சூரியனே! உன்னை வணங்குகிறேன்.

ப்ரும்ஹிதம் தேஜ புஞ்ஜஞ்சவாயு — ராக்ஷச மேவசா!
ப்ரபுத்வம் ஸர்வ லோகானாம் தம்ஸ்ரயம் பரண
மாம்யஹம்!!

**எங்குமாய் நிறைந்தாய் ஈசா**
**இறுகிய ஒளியும் உற்றாய்**
**பொங்கிடும் கடலும் நீயே**
**புவன்மும் காற்றும் நீயே**
**தங்கிடும் செல்வம் நீயே**
**தாங்கொணா ஒளிகொள் சக்தி**
**தங்கிடும் திருவும் நீயே**
**தர்மமும் நீயே அன்றோ**
**எங்கினி உன்றன் போலே**
**இறைவனும் உண்டோ உண்டோ**
**அங்கிநீ அனலும் ஆனாய்**
**ஆதவ போற்றி போற்றி**

தங்குறை தீர உன்னைத்
தாள்தொழு தேத்து வார்கள்
பங்குறை பரிதி நீயே
பாஸ்கர போற்றி போற்றி

எங்கும் நிறைந்தவரும் இறுகிய ஒளி வடிவினரும் ஆகாயத்தையும் காற்றையும் எல்லா உலகங்களையும் ஆள்பவரும் ஆகிய அந்தச் சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

பந்தூக புஸ்பஸங்காசம் ஹாரகுண்டல பூஜிதம்!
ஏகசக்ரதரம் தேவம்தம் ஸௌர்யம் பிரணமாம்யஹம்!!

வேங்கையின் பூப்போல் செம்மை
விளங்கிடும் மேனி கொண்டாய்
தாங்கரும் கழுத்தின் மாலை
தங்கிய அருளும் கொண்டாய்
ஒங்கிய புகழும் நீயே
ஒண்மணிக் குண்டலமும் கொண்டாய்
நீங்கிடா ஆழி ஏந்தி
நிகழ்த்தினாய் வையம் வாழ்த்த
ஏங்கினோர் என்றும் வாழ

இறைவனே கதிரினோயே
வேங்கையாம் வினைகள் தீர
வெற்றியே உன்னைப் போற்றி
தாங்கரும் சுமைகள்நீக்கி
தளிரடி பொருளாய்க் கொண்டு
நீங்கிடா அருள் பெற்றே
நிறைந்தனர் கோடி கோடி.

வேங்கைப் பூப்போல் சிவந்தவரும் கழுத்தில் மாலையும் காதில் ஒளிரும் குண்டலமும் அணிந்தவரும் காலவடிவான ஒரு சக்கரத்தைக் கையில் ஏந்தியவரும் ஆகிய சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

ஏக்கமுற்றோர் தமக்கு என்றுமே அருளும் சூரியனே உன்னை வணங்கி வாழ்வு பெற்றவர்கள் ஏராளம் ஏராளம்.

தம் ஸூர்யம் லோகர்த்தாரம் மஹா தேஜ! ப்ரதீபனம்!!
மஹா பாபஹரம் தேவம் தம் சூர்யம் ப்ரணமாம்யஹம்!!

உலகிதன் முதல்வன் நீயே
ஒண்பொருள் உண்மை நீயே
விலகிடா ஒளிகொள் வாயே
விலக்குவை வினையை மீள
அலகிலாப் புகழும் ஈவை
அம்பொருள் ஆனாய் நீயே
விலகுறாக் கருணை கொண்டாய்
விளக்கமாய் விளங்கும் வாழ்வே
ஆதவ வெற்றிச் செல்வ
அவனியின் முதல்வன் நீயே
பூதவம் செய்த தாலே
புண்ணிய உன்னைப் பெற்ற
நாதனே உன்னைப் போற்றி
நலமெலாம் பெறுவேன் நானே.

உலக கர்த்தாவும் மகத்தான ஒளி வீசுபவரும் கொடிய பாவங்களைப் போக்குபவரும் ஆகிய அந்த சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

பூதவத்தால் உன்றனைப் பெற்றது ஆதி நாதனாகிய உன்னையே வணங்கி எல்லா நலமும் நான் பெறுவேன்.

தம் ஸௌர்யம் ஜகதாம் நாதம் ஜ்ஞானப் பிரகாச
மோக்ஷதம்!
மகா பாபஹரம் தேவம் தம் சூர்ய ப்ரணமம்யஹம்!!

உதயமே கதிரே நீதான்
உலக நாதனுமாய் ஆனாய்
உதயமே தந்தாய் ஞான
ஒளியினால் வையம் வாழ
இதயமே போன்ற எங்கள்
இறைவனே மறையே உன்றன்
இதயமே சாயா தேவி
இணையில் சீரடிகள் போற்றி
முதுமையும் முக்தி தானும்
முன்னவன் உன்னால் ஆகும்
பதுமைபோல் மயங்கும் மாந்தர்
பருதியை நினைப்பா ராகில்
நொதுமலர் மனம்பெ றார்கள்

நுண்மையுள் நுண்மை காண்பர்
ம்துமலர் மாந்தும் வண்டாய்
மாசறு மனமும் கொள்வார்.

உலக நாதரும் ஞான ஒளியால் முக்தி அளிப்பவரும் கொடிய பாடங்களை நீக்குபவரும் ஆன அந்த சூரிய பகவானை நான் வணங்குகிறேன்.

ஆதவ! உன்னை வணங்குபவர் நுண்மையுள் நுண்மை காணும் தன்மை ஒட்பம் உடையவராக வாழ்வர்.

ஆதவன் தன்னைப் போற்றும்
அட்டகம் இதனைக் கூறில்
தீதெலாம் தீரும் நன்மை
திரும்பவும் சேரும்; சேரா
தேதெலாம் கிரக பீடை
தரித்திரர் தனவா னாவர்
ஏதொலாம் உண்டோ நன்மை
ஏற்பர் சந்ததிகள் உண்மை.

இந்தச் சூரியாஷ்டகத்தை நாடோறும் படித்தால் கிரகபீடைகள் நீங்கும். புத்திரப்ராப்தி ஏற்படும். தரித்திரர் தனவானாவர்.

மாமிசம் மதுபா னங்கள்
ஞாயிறில் ஆகா துண்மை
காமியாய் அதனைச் செய்யின்
கஷ்டமே நேரும் உண்மை
நோயுடன் தரித்தி ரத்தே
நுடங்குவர் மேலும் மேலும
போயுடன் ஏழேழ் ஜென்மப்
பிறவியில் பிழைகொள் வாரே

மாமிச உணவும் மது பானமும் சூரிய தினமான ஞாயிறன்று செய்பவர் ஏழு பிறவி நோயாளியாகவும் பிறவிதோறும் தரித்திரராகவும் இருப்பர்.

பெண்ணுடன் புணர்தல் எண்ணெய்
தன்னுடல் குளித்தல் மேலும்
பொன்னென மதுமாம் ஸத்தை
போற்றியே அருந்தல் தீதாம்

கண்ணெனும் ஞாயி றன்று
கடமையாய் விலக்கு வார்கள்.
எண்ணரு சூர்ய லோகம்
இவர்க்கென உள்ள தாகும்.

தாம்பத்திய உறவு, எண்ணெய்க்குளியல், மது மாமிசம் ஆகியவற்றை ஞாயிற்றுக்கிழமையில் தவிர்ப்பவர்களை நோயும் மனக்கவலையும் வறுமையும் அணுக மாட்டா. அவர்கள் சூர்யலோகத்தை எய்துவர்.



ஸாம்ப புராணத்தில் கூறிய
நோயகற்றும் சூர்யாட்டகம்
முற்றும்.

அலுவலகம் :
நெ. 14 (ப.எண் : 11),
கிழக்கு சர்குலர் தெரு,
செயின்ட் ஆண்டனி பள்ளி பின்புறம்
சாந்தோம், மந்தவெளிபாக்கம்,
சென்னை – 600 028.
போன் : 495 6754



*Office :*
14, (Old No. 11),
East Circular Road, Santhome,
Mandavelipakkam, Chennai - 600 028.
(St. Antony School Back Side)
✆: 495 67 54

---

அச்சிட்டோர் : எம்.டி பிரிண்டிங் ஒர்க்ஸ்
சென்னை – 600 028. போன் : 4939612